உ

கணபதி துணை.

சுப்பிரமணியத் தம்பிரான்

செய்த

# கலசைச் சிலேடை வெண்பா





ஸ்ரீ ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையவர்கள்

கேள்விப்படி

[illegible] ஸ்ரீ

ஆ. குமாரசுவாமிப்பிள்ளையவர்கள்

செய்த

குறிப்புரையோடு

புன்னாலைக்கட்டுவன்

சி. கணேசையரால்

பதிப்பிக்கப்பட்டது.

கடவுள்துணை.

# கலைசைச் சிலேடைவெண்பா.

---

## காப்பு.

கார்மருவுஞ் சோலைக் கலைசைச் சிலேடைவெண்பா
சீர்மருவக் கூறுந் திறம்வருமே—ஏர்மருவுங்
கோதறுமுத் தோடைக் குளத்திருதாட் செங்கழுநீர்ப்
போதகமென் போதகத்தாம் போது.

### குறிப்புரை.

முத்து ஓடை குளம் அத்து இரு தாள் செங்கழுநீர் போதகம்—முத்துப்பதித்துச் செய்யப்பட்ட பட்டமணிந்த நெற்றியையும் இரண்டுபாதமாகிய செங்கழுநீர்ப்பூவையுமுடைய யானையாகிய விநாயகர். போது அகம்—பூவையொத்தமனம்.

வட்டிக் கலைநீர் வடித்தமைப்போர் மன்னுதிருத்
தொட்டிக் கலைவெண்பாச் சொன்மாலை—கட்டிடமெய்ச்
செங்கழுநீ ராம்பலிரு செந்தா மரைமலருந்
தங்கிடுமென் னெஞ்சகத்தே தான்.

இக்கு—கரும்பு. ஆம்பல்-யானை.

---

# நூல்.

நீருலவும் பூமகளு நெட்டகழின் வார்புனலுங்
காருணிய மீதூர் கலைசையே—ஏருலவுந்
தண்டரங்க மாலையார் தாங்குமுடி யார்வரைக்கோ
தண்டரங்க மாலையார் சார்பு.

காருணியம்—கிருபைத்தன்மை. கார் உணிய—மேகம் உண்ணும்பொருட்டு. தண்டு அரங்கம் மால் ஐ—தண்டாயுதத்தையுடைய சிறீரங்கத்திலிருக்கும் விட்டுணுவுக்குத்தலைவர். ஆர்—ஆத்திமாலை. வரை கோதண்டர்—மலையாகிய வில்லுடையவர்.

மாதரணி குங்குமமும் வாளேந்து கையினருங்
காதமருக் கூரும் கலைசையே—போதலரும்
அங்கொன்றைத் தாரா ரறிந்துதமைப் போற்றுதார்க்
கங்கொன்றைத் தாரா ரகம். உ

காதம் மரு கூரும்—காவததூரத்துக்கு வாசம் மிகுகின்ற. காது அமருக்கு ஊரும்—கொல்லுகின்ற யுத்தத்துக்குச் செல்லும். அம்—அழகு. தார்—மாலை. அங்கு—அவ்விடம்.

வாஞ்சைதரும் பைங்கிளியு மாங்குயில்போல் வார்த்தையரும்
காஞ்சியிடை யார்க்குங் கலைசையே—ஆஞ்சலத்தால்
வெற்றிமதிக் கண்ணியான் வீயாம லாண்டவருள்
வெற்றிமதிக் கண்ணியான் வீடு. ௩

காஞ்சி இடை ஆர்க்கும்—காஞ்சிமரத்திலிருந்து ஆரவாரிக்கும், எண்கோவை மணியை இடையிலே கட்டும். வெற்று இமதிக்கு அண்ணி—வெறுமையான இம்மதியை அண்ணி. மதிக்கண்ணி—சந்திரனாகிய மாலை.

ஆவலுடன் பாவலரு மாறுகால் வண்டினமுங்
காவலரைச் சூழுங் கலைசையே—மேவும்
அரிவையம்பா கத்தா னரனொருமூன் றெய்தோன்
அரிவையம்பா கத்தா னகம்.

காவலர்—அரசர். கா அலர்—சோலையிலுள்ள புட்பம். அரிவை அம்பு ஆக—விட்டுணு கூரியபாணமாக. அரிவை—பெண். அம்—அழகு.

இச்சைமட வார்தனமு மீட்டறத்தி னோர்தனமுங்
கச்சங் கடக்குங் கலைசையே—மெச்சிவட
ஆலமருந் தண்ண லறுகணிவோன் வங்தெழுந்த
ஆலமருந் தண்ண லகம். ௫

தனம்—முலை, திரவியம். கச்சு அங்கு அடக்கும்—கச்சினை அங்கே அடக்குகின்ற. கச்சம்—அளவு. ஆல் அமரும் தண் நல். ஆலம் அருந்து—நஞ்சையுண்ட. அண்ணல்—தலைவர்.

நாவலர்தம் புத்திரரு நண்ணும் பிரமரமுங்
காவியங்க ளாயுங் கலைசையே—தாவெள்ளைக்
கோட்டுக் குழையார் கொழுங்கயற்கண் மெல்லியலாங்
கோட்டுக் குழையார் குடி.

காவியங்கள்—காப்பியங்கள். காவி அம் கள்—காவிப்பூவிலுள்ள அழகிய தேன். கோடு குழையார்—சங்கக் குண்டலத்தையுடையவர். மெல்லியலாங் கோட்டுக்கு—பெண்ணாகிய கொம்புக்கு. உழை—பக்கம்.

தண்ணார் பொழிற்சுரும்புந் தத்தைமொழி யார்கதுப்புங்
கண்ணாடி வீழுங் கலைசையே—ஒண்ணாரும்
வான்முத் தலைவேலை மைக்கடுவுண் டோன்கரத்தில்
வான்முத் தலைவேலை வாழ்வு.

கள் நாடி—தேனைக்கருதி. வால் மூத்து—வெண்மையானமுத்து. மூத்தலைவேல்—சூலம். ஐ—கடவுள்.

பொற்புரிசை நீள்கொடியும் போர்வயவர் திண்புயமுங்
கற்பகமே லோங்குங் கலைசையே—எற்புருக
நந்தாண்ட வத்த னளினத்தன் வீழ்ந்திறைஞ்சும்
நந்தாண் டவத்த னகர். ௮

கற்பகம்—கற்பகமரம். கல் பக—கல் பிளக்க. நந்து ஆண்ட அத்தன்—சங்கைத்தரித்த கரத்தையுடையராகிய விஷ்ணு. நளினத்தன்—பிரமா. தாண்டவத்தன்—நடனத்தையுடையவர்.

சிந்து மதமாவுந் தேனுகர்மா வும்பூவிற்
கந்தங் கலக்குங் கலைசையே—தந்தாட்
குருக்கங் கணத்தினா னுற்றிடச்செய் தோன்பாம்
புருக்கங் கணத்தினா னூர். ௯

பூ—பூமி. புஷ்பம், கந்து அங்கு அலைக்கும்—தூணை அங்கே அழிக்கின்ற, கந்தம்—வாசனை. உருக்கம்—அன்பு. கணத்தில் நான் உற்றிட—கணப்பொழுதில் நான் அடையும்படி. பாம்பு உரு கங்கணம்—பாம்பினாலாகிய அழகியகடகம்.

வள்ளமுலை யார்விழியும் மைக்கா மதுகரமுங்
கள்ளம் பயிலுங் கலைசையே—உள்ளவலம்
போகத் திருந்தார் புரமெரித்தார் தேவியொடும்
போகத் திருந்தார் புரம். ௧௦

கள்ளம்—களவு. கள் அம்பு அயிலும்—தேனாகிய நீரையுண்ணும். வலம் போக—வலிமை கெடும்படி. திருந்தார்—பகைவர். போகத்து—போகத்தில். இருந்தார்—இருந்தவர்.

வான்மிசையே றும்பொழிலு மானார் குழலுமலர்க்
கான்மணந்து வக்குங் கலைசையே—மேன்மைதரும்
பாலத் திருக்கழலார் பண்டிருவர்க் காடியகா
பாலத் திருக்கழலார் பற்று. ௧௧

கான்—வாசனை. மணந்து உவக்கும். மலர்க்கால்—மலரினிடம். மணம்—பரிமளம். பாலம் திருக்கு அழலார்—நெற்றிக்கண் அக்கினியாக வுடையவர். காபாலம்—ஒரு கூத்து.

பாயாத மானாரைம் பாலும் பசுந்தோளுங்
காயாவே யொக்குங் கலைசையே—ஏய்புலித்தோல்
அம்பரவ னானா னணிவலைகொண் டங்கொரு நாள்
அம்பரவ னானா னகம். ௧௨

பாயாத மானார்—மகளிர். காயா—காசைப்பூ. காயாவேய்—பச்சைமூங்கில். புலித்தோல் அம்பரவன்—புலித்தோலை உடையாக உடையவர். ஆனான்—இஷபாரூடர். பரவன் ஆனான்—வலைஞனானவர்.

சேலார் செழுந்தடத்திற் செந்தா மரையினிற்றேன்
காலாறு பாயுங் கலைசையே—சூலேறு
பாணியார் வேணியார் பாகீ ரதியென்னும்
பாணியார் வேணியார் பற்று. ௧௩

கால்—வாய்க்கால். காலாறு—வண்டு. பாணியார்—கையுடையார். வேணி ஆர்—ஆகாயத்திற பொருந்திய. பாணி ஆர் வேணியார்—நீர்பொருந்திய சடையுடையவர்.

தாமரைவண் டெங்குளமுஞ் சார்விரகத் தாரிடமுங்
காமரம்பா டுஞ்சீக கலைசையே—மாமதமா
தங்க முரித்தார் தடங்கேழற் கோட்டினைச்சூர்
தங்க முரித்தார் தலம். ௧௪

காமரம்—ஒருபண். காமர் அம்பு—அழகிய நீர். காமர் அம்பு—மன்மத பாணம். மாதங்கம் உரித்தார்—யானைத்தோலை உரித்தவர். சூர் தங்க—அச்சம பொருந்த.

மண்டமர்செய் யுங்களமும் வான்கரும்பை மள்ளருஞ்சே
கண்டகரச சாடுங் கலைசையே—தொண்டா
கணிச்சித் திருக்கையான் காதரத்தைத் தீர்க்குங்
கணிச்சித் திருக்கையான் காப்பு ௧௫

கண்டகர் அச்சு—கொரொருடைய உடம்பு. கண் தகர—கணுக்கள் உடையும்படி. தொண்டர்கண் இச்சித்த இருக்கையான்—அடியார்களிடத்து விரும்பி இருத்தலையுடையவர். கணிச்சி—மழு.

தொண்டைக் கனிவாயார் சொல்லு நயனமுந்தேன்
கண்டவியப் பணையுங் கலைசையே—தண்டமிழ்சேர்
வண்டணிகைச் சத்தியத்தன் வாரணாத்த னத்தனித்தன்
வண்டணிகைச் சத்தியத்தன் வாழ்வு. ௧௬

தேன் கண்டு அவிய—தேனுங் கற்கண்டுங் கெட. தேன் கண்ட வியப்பு—வண்டினைக்கண்டதனாலாய வியபபு வண் தணிகை—சிறந்ததணிகைமலை. சத்தியத்தன்—வேற்கரனாகிய முருகன். அத்தன்—பிதா. வண்டு அணி கை சத்தி—வளையலைத்தரித்த கையையுடைய உமை.

பன்மறைதேர் பூசுரரும் பாறுதலில் வாழ்க்கையருங்
கன்மந் திரஞ்செய் கலைசையே—முன்மதனா
ஐயம் புதையா ரறிவகல வென்னு ளத்தில்
ஐயம் புதையா ரகம்.

கன்மம்—கிரியை. திரம்—நிலை. கல்மந்திரம்—கல் வீடு. ஐ அம்பு—பஞ்ச பாணம். ஐயம்—சந்தேகம்.

வல்லா ரிளமுலையார் வாள்விழியு நீள்வயலுங்
கல்லாரங் காட்டுங் கலைசையே—பொல்லாக்கா
மத்தகத்திற் கண்ணார் மருவுவதற் கண்ணார்
மத்தகத்திற் கண்ணார் மனை. ௧௮

கல்லாரம்—கருங்குவளை. கல் ஆரம்—இரத்தினமாகிய முத்து. காமத்து அகத்தில் கண்ணார்—காமத்தையுடைய மனத்தில் நினையாதவர். அண்ணார்—அண்மையாகார். மத்தகத்தில்—நெற்றியில்.

கொந்துகுழற் கோல்வளையார் கொங்கையுநற் பாகருந்திண்
கந்துகத்தே ரோட்டுங் கலைசையே—சந்தனையுஞ்
செப்பினகி லத்தார் செழுமனையில் வந்தரந்தோர்
செப்பினகி லத்தார்தஞ் சேர்வு கக

கந்தகத்து ஏர்—பந்தினழகு. கந்துகம் தேர்—குதிரைபூட்டியதேர் செப்பு இன் நகிலத்தார்—செப்பினையொத்த முலையையுடையபெண்கள். செப்பின்—சொல்லின். அகிலத்தார்—எல்லாமுடையவர்.

தேன்மருவும் பண்ணைகளுஞ் செல்வர் திருமனையுங்
கான்முளைகண் மாருக் கலைசையே—வான்மே
விருப்பு வணத்தார்க ணேந்தடியார் காய்ந்த
விருப்பு வணத்தா ரிடம். உ௦

கான்முளைகள்—பயிர்கள், புத்திரர்கள். வான்மேவு இருப்பு—ஆகாயத்திற் பொருந்திய இருக்கை. உவணத்தார் கண் ஏந்து அடியார்—விட்டுணுவினால் அணியப்பட்டகணை ஏந்திய திருவடியையுடையவர். காய்ந்த இருப்புவணம்—சிவப்பு.

முத்துநகை யார்குழல்சேர் மொய்யளியும் வீரருநற்
கத்திகையிற் சுற்றுங் கலைசையே—மித்தையுறும்
வண்டருக்கப் பாலார் மறைப்பொருளால் வர்க்குரைத்த
வண்டருக்கப் பாலார் மனை. உக

கத்திகை—மாலை. கத்தி—ஓராயுதம். வண்டருக்கு அப்பாலார்—கீழோருக்கு எட்டாதவர். தருக்கப்பாலார்—தருக்கப்பகுதியையுடையவர்.

திக்குலவுங் கண்ணாருஞ் சித்திரயாழ் வல்லோருங்
கைக்கிளைபா ராட்டுங் கலைசையே—மிக்க
திருமாதங் கத்துரியார் செம்பொனக மீன்ற
திருமாதங் கத்துரியார் சேர்வு. உஉ

கைக்கிளை—ஒருதலைக்காமம். கிளை—யாழிலொரு நரம்பு. மிக்கு அதிரும் மாதங் கத்து உரியார்—மிக்கு ஒலிக்கின்ற யானைத்தோலையுடையவர் மாது—பெண். அங்கத்து உரியார்—சரீரத்துள்ளவர்.

அச்சா னகியனையா ரங்கைகளுங் கொங்கைகளுங்
கச்சூ ரமுந்துங் கலைசையே—நச்சாரக்
கண்டங் கறுத்தார் கரத்தைத்தி யின்செருக்கைக்
கண்டங் கறுத்தார்தங் காப்பு. உ௩

கச்சூரம்—கழங்கு. கச்சு ஊர—கச்சானது புடைபெயர. கண்டம்—கழுத்து. கண்டு அங்கு அறுத்தார்.

வம்பலர்தார் வேந்தர் மதகரியும் வாவிகளுங்
கம்பலையோ ரேருங் கலைசையே—செம்பதுமத்
தானத்தன் றானத்தன் றங்கட் கிறைவனுசாத்
தானத்தன் றானத்தன் சார்பு. ௨௪

கம்பலை—ஆரவாரம். கம்பு—சங்கு. அலை—திரை. பதுமத்தான்—பிரமா. நத்தன்—விட்டுணு. தானத்தன்—தேவுலகத்தையுடைய இந்திரன். உசாத்தானம்—ஒருதலம். அத்தன்—தலைவன்.

வேம்பாகி னின்மொழியார் மென்றோளுஞ் செவ்விதழுங்
காம்பீர மல்குங் கலைசையே—பாம்பார்
அகலத்தா னாண்டான் பெண் ணாணெனன் மம்மர்
அகலத்தா னாண்டா னகம். ௨௫

காம்பு ஈர-மூங்கிலைப் பிளக்க. காம்பீரம்-முருக்கம்பூ. அகலத்தான்—மார்புடையவர். ஆன்—பெண் ஆனான். அகல—நீங்க. ஆண்டான்—அடிமைக்கொண்டான்.

மான்றமட வார்குழலும் வண்டரளஞ் சங்கினமுங்
கான்றங் கிவருங் கலைசையே—தேன்றங்
கருக்கங் கணியா ரறிவுடைமை யார்மெய்
யருக்கங் கணியா ரகம். ௨௬

கான்—வாசனை. கான்று அங்கு இவரும்—கக்கி அங்கே எறுகின்ற. அருக்கங்கணியார்—எருக்கம்பூமாலையையுடையவா. மெய்யருக்கு அங்கு. அணியார்—கிட்டினவர்.

புண்ணியமெய்ப் பணணைவரும் பொன்னனையார் பூங்குழலுங்
கண்ணிவா சஞ்செய் கலைசையே—எண்ணியொரு
மன்னாக மத்தினான் வாரிகடைந் தோர்க்கிரங்கும்
மன்னாக மத்தினான் வாழ்வு. ௨௭

கண்ணி—நினைத்து. வாசஞ்செய்தல்—இருத்தல். கண்ணி—மாலை. வாசஞ்செய்தல்—பரிமளித்தல். மல் நாகம் மத்தினான்—வலிய மந்தரமலையாகியமத்தினால். மன்—நிலை. ஆகமத்தினான்—ஆகமநூலுடையவர்.

சிந்துமதுப் பூங்காவிற் செவ்வீதி யிற்றும்பி
கந்தருவந் தேரூர் கலைசையே—உந்தி
கலசத்த னத்தியத்தன் காஞ்சனவெற் பீன்ற
கலசத்த னத்தியத்தன் காப்பு. ௨௮

தும்பி—வண்டு. கந்தருவம்—இசைப்பாட்டு. தேர்—ஆராய்கின்ற. தும்பி—யானை. கந்தருவம்—குதிரை. தேர்—இரதம். உந்து இகல் அசத்தன்—செலுத்துகின்ற வலிமைபொருந்திய ஆட்டுவாகனத்தையுடைய முருகக்கடவுள். கலசத்தனத்தி—குடம்போன்ற முலையுடையவள்.

ஒண்டொடியார் வாய்மொழியு முண்மைப் புகழுநவ
கண்டங் கடக்குங் கலைசையே—மண்டு

மருத்தருந்தும் பையரவர் வார்சடைமேல் வைத்த
மருத்தருந்தும் பையரவர் வாழ்வு. ௨௯

நவ கண்டு—புதுமையாகிய கற்கண்டு. அங்கு அடக்கும். நவ கண்டம்—பாரதமுதலிய ஒன்பது கண்டம். மருத்து அருந்தும் பை அரவர்—காற்றினை உண்ணும் படம்பொருந்திய பாம்புடையவர். மரு—மணம். தும்பையர்—தும்பைமாலையர்.

தண்ணார் வயற் கரும்புந் தத்துவந்தே ரந்தணருங்
கண்ணாரஞ் சிந்துங் கலைசையே—விண்ணாடும்
ஐயரவா விட்டா ரகத்தார்நற் குண்டலங்கள்
ஐயரவா விட்டா ரகம். ௩௦

கண்—கணு. ஆரம்—முத்து. நாரம்—நீர். ஐயர்—பூச்சியர் அவா விட்டா—ஆசைநீங்கினவருடைய. அகம்—மனம். ஐ அரவா—அழகிய பாம்பாக. விட்டார்—தரித்தவர்.

சிட்டையுறு சிட்டருஞ்செய் சீலங் கடைசியருங்
கட்டங் கழிக்குங் கலைசையே—வட்டக்
குடிலச் சடையார் கொடியேனைப் பீறற்
குடிலச் சடையார் குடி. ௩௧

கட்டம்—பீடை. கட்டு அங்கு அழிக்கும்—களைந்து அங்கே அழிக்கும். குடிலம் சடையார்—வளைவாகிய சடையுடையவர். குடில் ஆச்சு அடையார்—குடிலாகிய உடம்பில் அடையவிட்டார்.

கொஞ்சுகிளி யன்னார் குவிமுலையுங் கண்ணுவருங்
கஞ்சமுருக் கும்பூங் கலைசையே—வஞ்சமனக்
கைய ரவப் பணியார் கண்ணுமனக் துக்கரியார்
கையரவப் பணியார் காப்பு. ௩௨

கஞ்சம்—தாமரை. முருக்கும்—கெடுக்கும் கஞ்சம்—வெண்கலம். உருக்கும்—உருக்குகின்ற. கையர்-கீழோர். அவப்பணியார்—அவத்தொழிலோர். கை அரவம் பணியார்—கையிலே சர்ப்ப கடகமுடையவர்.

சிலமுறு மன்னவருஞ் செங்கழுநீர்ப் போதலருங்
காலமளி யேறுங் கலைசையே—மாலில்
வருந்தப் படையார் மனத்தா ரினுநான்
வருந்தப் படையார் மனை. ௩௩

கால் அமளி—கட்டில். காலம் அளி ஏறும். மாலில் வரும் தப்பு அடையார்—மயக்கத்தால் வருந்தவற்றை யடையாதவருடைய. வருந்த—வருந்தும்படி.

நற்புலவர் செய்யுளுநன் னாரியர்கள் வெண்ணகையுங்
கற்பனைய வென்னுங் கலைசையே—பொற்பார்
சலசத்தா னந்தனும்பர் சாரா தவசஞ்
சலசத்தா னந்தன் றலம். ௩௪

கற்பனைய—வருணனையையுடையன. கற்பு அனைய—முல்லைமுகையை யொத்த. சலசத்தான்—பிரமா. நந்தன்—விஷ்ணு. அசஞ்சல சத்து—சஞ்சலமில்லாத சத்துப்பொருள். ஆனந்தன்—ஆனந்தமுடையவர்.

அன்னநடை யார்மொழியு மாடவர்க டண்டோளுங்
கன்னலம்போ லாருங் கலைசையே—சென்னியிடை
வாரம் படைத்தார் வளர்சிதம்ப ரேசருமை
வாரம் படைத்தார் மனை. ௩௫

கன்னல் அம்—கருப்பஞ்சாறு. கல் நலம். வார் அம்பு அடைத்தார்—ஒழுகுகின்ற நீரை அடைத்தவர். வாரம்—அன்பு. படைத்தார்—பெற்றுக்கொண்டவர்.

தேந்தா மரைஞிமிறுந் திண்ணையவர் தூணிகளுங்
காந்தாரம் பாடுங் கலைசையே—மாந்த
வருங்கடுக்கை யான்வாங்கி மாந்தினன்றேன் றேங்க
வருங்கடுக்கை யான்வாழ் மனை. ௩௬

காந்தாரம்—ஓர் பண். காந்து ஆர் அப்பு. கடு கையான் வாங்கி—நஞ்சைக் கையால் வாங்கி. தேன் தேங்க வரும்—வண்டுகள் தேனைக்கவரும். கடுக்கை—கொன்றை.

பொங்குசுதை மாளிகையும் போர்வீரர் வெற்றரையுங்
கங்குலவித் துய்க்குங் கலைசையே—எங்குநிறை
வையம் படைத்தான்கம் மாய்த்தாழித் தூணியிற்றன்
வையம் படைத்தான் மனை. ௩௭

கங்குல் அவித்து—இராவைக் கெடுத்து. கங்கு உலவி—பருந்து உலாவி. வையம் படைத்தான்—பிரமா. கம்—தலை. ஆழித்தூணி—திருப்பாற்கடலாகிய அம்புக்கூடு. தன் வை அம்பு—தன்னுடைய விஷ்ணுவாகிய பாணத்தை.

வேதியர்பொற் குண்டலமும் விண்ணா டுடையவருங்
காதலம ருஞ்சீர்க் கலைசையே—மாதனங்கள்
பந்தங் குலைக்குமம்மான் பாகத்தா னென்னிருண்ட
பந்தங் குலைக்குமம்மான் பற்று. ௩௮

காது அலமரும்—காதிற் சுழலுகின்ற. காதல் அமரும்—விருப்போடு தங்குகின்ற. மா தனங்கள் பந்து அங்கு உலைக்கும் அம்மான்—பெரிய முலைகள் பந்தை அங்கே உலைக்கின்ற அந்த உமை.

பொற்கொடியார் செங்கையினிற் பூம்பழனச் சேற்றலையிற்
கற்கடக மூருங் கலைசையே—சற்குருவாய்
வந்தவலம் பாற்றினார் வார்சடைமேல் விண்மேனி
வந்தவலம் பாற்றினார் வாழ்வு. ௩௯

கல் கடகம்—இரத்தினத்தாலாகிய கடகம். கற்கடகம்—ஞெண்டு. அவலம் பாற்றினார்—அவலத்தைநீக்கினவர். விண்மேல் நிவந்த அலம்பு ஆற்றினார்—ஆகாயத்தில் உயர்ந்து ஒலிக்கின்ற கங்காநதியை யுடையவர்.

நீர்மண் டிலஞ்சிகளு நீண்டதிருக் கோபுரமுங்
காரண்டந் தோயுங் கலைசையே—வீரநர
பஞ்சா னனத்தான் பதைபதைக்கத் தான்பிளந்த
பஞ்சா னனத்தான் பதி. ௪௰

காரண்டம்—நீர்க்காக்கை. கார்—மேகம். அண்டம்—ஆகாயம். நரபஞ்சானனத்தான்—நரசிங்கவடிவான விஷ்ணு. பஞ்சானநம்—ஐம்முகம்.

பொற்பூர் மடந்தையரும் போதகமன் னூர்மார்புங்
கற்பூர நாறுங் கலைசையே—விற்போற்
கரும்புருவ மானூர்தங் காமுறூர் நெஞ்சிற்
கரும்புருவ மானூர்தங் காப்பு. ௪௧

கற்பு ஊர—கற்புப் பரக்க. கற்பூரம்—பளிதம். கரும் புருவ மானூர்தங் காமுறூர்—கரிய புருவத்தையுடைய பெண்களது காமத்தையடையாதவருடைய. கரும்பு உருவம் ஆனூர்.

மல்லுழவ ரேரிகட்டும் வாளுழவர் வாம்பரிக்குங்
கல்லணைகள் வைக்குங் கலைசையே—முல்லைநல்லார்
மத்தி னடிக்குமெய்யன் மால்விடையாக் கொண்டவனி
மத்தி னடிக்குமெய்யன் வாழ்வு. ௪௨

கல் அணைகள்—கல்லாலாய வரம்புகள். கல்லணை—குதிரைமேற்றவிசு. மத்தின் அடிக்கும் மெய்யன்—மத்தினால் அடிக்கப்பட்ட மெய்யையுடைய விஷ்ணுவை. ஈமத்தின் நடிக்கும் மெய்யன்.

நம்புமடி யார்வினையு நல்லரசர் வீதிகளுங்
கம்பமா வோடுங் கலைசையே—சம்புவெள்ளிப்
பொற்பினா கத்தான் புகழ்ச்சிதம்ப ரேசனெனு
பொற்பினா கத்தான் புரம். ௪௩

கம்பம் ஆ—நடுக்கமாக. கம்பமா—யானை. வெள்ளிப் பொற்பின் நாகத்தான்—வெள்ளியாகிய அழகிய மலையையுடையவர். பினாகத்தான்—பினாகம் என்னும் வில்லையுடையவர்.

மாதரம்பொற் கொப்புகளும் வாயார் மதகுகளுங்
காதலையப் போடுங் கலைசையே—கோதில்
பரதத்து வந்தானென் பார்க்கருணி யென்றும்
பரதத்து வந்தான் பதி. ௪௪

கொப்பு—ஓராபரணம். காது அலையப் போடும்—காதில் அலையும்படி இடுகின்ற. காது அலை அப்பு ஓடும்—கரையை அழிக்கின்ற அலையையுடைய நீர் ஓடும். பரதத்துவம்—பெரிய தத்துவம். பரதத்து உவந்தான்—கூத்தில் விரும்பினவர்.

பட்டங்கொள் வேந்தர் பவனியின்மின் னாருரையிற்
கட்டியங்கூ றுஞ்சீர்க் கலைசையே—சிட்டருளத்
தன்பா னதியானத் தானந்த மாம் பெருமை
யன்பா னதியா னகம். ௪௫

கட்டியம்—அரசர்புகழ். கட்டி அங்கு ஊறும். கட்டி—கற்கண்டு. உளத்து அன்பான தியானத்து ஆனந்தம் ஆம் பெருமையன். பால் நதியான்—கங்காநதியையுடையவர்.

மாளில் வணிகரும்பூ வார்குழலின் மாதரும்பொற்
காசறையுட் கொட்டுங் கலைசையே—வீசகையின்
மாசணக்காப் பிட்டவரன் வண்ணத் திருவுருவின்
மாசுணக்காப் பிட்டவரன் வாழ்வு. ௪௬

காசு—இரத்தினம். அறையுள் கொட்டும். காசறை—மயிர்ச்சாந்து. மாசுணம் காப்பு இட்ட அரன்—சர்ப்ப கங்கணத்தை இட்ட அரன். சுணம் காப்பு—பொடியாகிய விபூதி.

மன்னரணி மாளிகையு மாருக் கொடையினருங்
கன்னன்மணி யேயுங் கலைசையே—வன்னிமதி
என்பரவ மட்டா ரெருக்கணிவார் காமியா
என்பரவ மட்டா ரிடம். ௪௭

கல் நல்மணி—கல்லாகிய நல்ல மணி. கன்னன் மணி—கன்னனையும் சிந்தாமணியையும். என்பு அரவம் மட்டு ஆர் எருக்கு காமியர் என்பர் அவம் அட்டார்-காத்துக்கொள் என்பவருடைய தீங்கை அட்டவர். மியா—முன்னிலையசை.

மைவாழ் மதிற்கிடங்கு மள்ளர் பெருங்குழுவுங்
கைவேழ மாடுங் கலைசையே—வைவாய்ந்த
கட்டங்கங் கையுடையார் காமருசீர்ச் செஞ்சடைமேற்
கட்டங்கங் கையுடையார் காப்பு. ௪௮

கைவேழம்—யானை. கை வேழம்—கையில் கரும்பு. கட்டங்கம்—மழு. கட்டு அம் கங்கை.

பொன்னிலகு பூந்தடமும் பொற்பினட மங்கையருங்
கன்னியரங் காடுங் கலைசையே—மன்னு
மலைவிலத்த ரன்பாய் மலைவிலத்த ரென்றும்
மலைவிலத்தர் வாழு மனை. ௪௯

கன்னியர் அங்கு ஆடும். கன்னி அரங்கு—அழிவின்மையாகிய சபை. மன்னு மலைவில் அத்தர்—நிலையான மேருமலையாகிய வில்லையேந்திய கையையுடையவர். மலை விலத்தர்—அணிகின்ற வில்வத்தையுடையவர். மலைவு இல் அத்தர்.

சுந்தரஞ்சேர் நந்தினமுந் தோகை மயிலுமின்னார்
கந்தரங்கண் டார்க்குங் கலைசையே—கொந்திதழிக்
கண்ணி யரிப்பார் கலங்குமுயிர்க் கஞ்ஞானக்
கண்ணி யரிப்பார்தங் காப்பு. ௫0

மின்னார் கந்தரம்-பெண்களுடைய கழுத்து, மின்னல்பொருந்திய மேகம். இதழிக் கண்ணியர்-கொன்றைமாலையை யுடையவர். அஞ்ஞானக்கண்ணி-அஞ்ஞானமாகிய வலை. அரிப்பார்—கெடுப்பவர்.

## கலைசைச் சிலேடைவெண்பா.

செய்ய தவத்தோருந் திரிமருப்புப் போர்த்தகருங்
கையடையா ருஞ்சீர்க் கலைசையே—வெய்யவிடத்
துத்திப்பாம் பாட்டினார் சொன்மூவர் தோத்திரஞ்செய்
தித்திப்பாம் பாட்டினார் சேர்வு. ௫௧

கையடை ஆரும்—அடைக்கலத்தானமாகப் பொருந்துகின்ற. கை அடை ஆரும்—கையிலுள்ள இலையை உண்ணுகின்ற. துத்தி—படப்பொறி. பாம்பு ஆட்டினார். தித்திப்பு ஆம் பாட்டினார்.

சிற்பரணி யாடரங்குந் திண்புரிசைக் கேதனமுங்
கற்பமுற வாக்குங் கலைசையே—பற்பலவெண்
டோற்றந் துரத்தினார் தோன்றிக் கிடந்திமைக்கும்
பாற்றந் துரத்தினார் பற்று. ௫௨

கல் பம்முற ஆக்கும்—கல் பொருந்தும்படி செய்யும். கற்பம் உறவு ஆக்கும்—சுவர்க்கத்தை உறவாக்குகின்ற. தோற்றம் துரத்தினார்—பிறவியை நீக்கினவர். பால் தந்து உரத்தினார்—வெண்மையான உபவீத மணிந்த மார்பையுடையவர்.

மாப் பொலிந்த வீகையரு மைந்தருநன் மாதவருங்
காப் பணியாக் கொள்ளுங் கலைசையே—தீப்பிறங்கு
மாலாழி யீந்தான்முன் மாலினுக்குப் பாலனுக்குப்
பாலாழி யீந்தான் பதி. ௫௩

கா பணியா—கற்பகச்சோலையை ஏவலாக. காப்பு—கடகம், விபூதி. மால் ஆழி—பெரிய சக்கரப்படை. பாலாழி-பாற்கடல்.

தந்திடையார் தோய்தடமுந் தாவு மிளவாளைகளுங்
கந்தித் தலைசேர் கலைசையே—வந்திதரும்
பிட்டுக் கலந்தார் பிராட்டிகமுத் திற்றொடையல்
இட்டுக் கலந்தா ரிடம். ௫௪

கந்தித்து—பரிமளித்து. அலை—திரை. கந்தித் தலை—கமுகின் உச்சி. பிட்டுக்கு அலந்தார். தொடையல் இட்டு—மாலையை இட்டு.

அங்கணையார் கையி லணிமதிவிற் றேன்பணையிற்
கங்கணமண் டுஞ்சீர்க் கலைசையே—பொங்கும்
இருபதத்த னையவரைக் கீழிருத்தி யின்பந்
தருபதத்த னையன் றலம். ௫௫

கங்கணம்—கடகம். கம் கணம்—மேகக் கூட்டம். கங்கு அணை—வரம்பருகை அண்ணும்படி. இருபது அத்தன் யைய—இருபது கையையுடைய இராவணன் வருந்த. பதத்தன்—பாதமுடையவர்.

சூழு மிளங் காவுஞ் சுரிகுழலார் சிற்றிடையுங்
காழகமுற் றேர்கொள் கலைசையே—தாழும்
பவத்துயரப் போக்கினார் பாலுறா தென்னைச்
சிவத்துயரப் போக்கினார் சேர்வு. ௫௬

காழ்—வயிரம். காழகம்-வஸ்திரம். பவத்துயரப் போக்கினார் பால்—பாவமாகிய துயரத்தை வருவிக்கும் குற்றம் பொருந்தினவரிடத்து. சிவத்து உயர.

தேசிலகு மாவணமுஞ் செம்மைநடு வோர்மொழியுங்
காசினியா யஞ்சேர் கலைசையே—மூசியென்னை
ஒட்டுஞ் சடைவிரித்தா ரோங்கிவரு நீர்புரந்தக்
கட்டுஞ் சடைவிரித்தார் காப்பு. ௫௭

காசினி ஆயம்-பூமியிலுள்ள பெண்கள் கூட்டம். காசில் நியாயம்-குற்றமில்லாத நீதி. சடைவு இரித்தார்-பாசத்தடையை நீக்கினவர்.

பூண்டாங்கு காளையரும் பொற்கோயின் மங்கையருங்
காண்டீப மேந்துங் கலைசையே—ஆண்டிரவி
பற்றகர மாட்டினார் பன்னகத்தைத் தாமரைபோல்
உற்றகர மாட்டினா ரூர். ௫௮

காண்டீபப்-வில். காண் தீபம்-காணப்படும் விளக்கு. பல் தகர மாட்டினார்-பல் உடையும்படி அடித்தவர். கரம் ஆட்டினார்.

ஞானமுடை யோருலகை நற்சிறுமி மார்குழலைக்
கானலெனக் காணுங் கலைசையே—மானமருஞ்
செங்க மலக்கரத்தார் தீரா தெனையழுத்தும்
பங்க மலக்கரத்தார் பற்று. ௫௯

கானல்—பேய்த்தேர். கான்-காடு. அல்-இருள். பங்க மலக்கு அரத்தார்—பங்கமாகிய மலத்துக்கு அரம்போன்றவர்.

வாரியளிப் போர்கரமு மாதருங்கோங் குப்பூவிற்
காரிகைக் கொப் பென்னுங் கலைசையே—ஆரியனாய்க்
கலலா லடியுற்றார் கான்போ யருச்சுனன்கை
வில்லா லடியுற்றார் வீடு. ௬0

பூவில்-பூமியில். காரி கைக்கு-காரி என்னும் வள்ளலுடைய கைக்கு. பூவிற் காரிகைக்கு-இலக்குமிக்கு. காரிகைக் கொப்பு என்னும்-அழகியகொப்பு என்னும் ஆபரணம் என்று சொல்லப்படும்.

செல்லோதி யார்காற் சிலம்புமவர் தோய்தடமுங்
கல்லோல மாறாக் கலைசையே—பொல்லேன்
அரந்தைக்கோ டீரத்தா ரைருள்வைத் தாண்ட
கரந்தைக்கோ டீரத்தான் காப்பு. ௬௧

கல் ஓலம்—பரலின் சத்தம். கல்லோலம்—திரை. அரந்தைக்கோள்தீர—அரந்தையாகிய குற்றம் தீர. கோடீரத்தான்—சடையையுடையவர்.

பூண்டகழற் காளையரும் பூந்தடத்திற் பூவையருங்
காண்டமுகந் தேறுங் கலைசையே—நீண்டசடைக்
கிந்துவளை விற்ரு ரெடுத்தணிந்தார் கூடலிலே
வந்துவளை விற்ருர் மனை. சுஉ

காண்டம் உகந்து—குதிரையை விரும்பி. காண்டம் முகந்து—நீரை முகந்து. இந்து வளை வில் தார்—சந்திரனாகிய வளைந்த ஒளியையுடைய மாலையை. வளை—சங்கு.

சிட்டமுறு யோகியருஞ் செய்யுளல வன்பெடையுங்
கட்டளையி னாடுங் கலைசையே—எட்டுருவாய்த்
தோய்ந்த வருக்கொளியார் சுற்றைம் பொறிவழிவிட்
டோய்ந்தவருக் கொளியா ரூர். சுரு

கட்டளையில் நாடும். கட்டு அளையின் நாடும்—வரம்பிலுள்ள புற்றில் நாடும். அருக்க ஒளியார்—சூரியப் பிரகாச முடையவர். ஒளியார்-மறையார்.

தேற்றாச் சிறாரினமுந் தேம்பொழிலு மல்குசிறு
காற்றேர் கடாவுங் கலைசையே—போற்றியன்போ
டேகுவல யத்தா ரிறைஞ்சும் படப்பாந்தள்
வாகுவல யத்தார் மனை. சுச

சிறு கால் தேர்—சிறிய உருளையையுடைய தேர். சிறு காற்று—தென்றல். குவலயத்தார்—பூமியிலுள்ளவர்.

ஆயச் சிறார்படமு மார்க்குங் கடாசலமுங்
காயத் திரியுங் கலைசையே—நேயமுடன்
பைத்த பதஞ்சலியார் பார்த்துருகப் பொற்பொதுவில்
வைத்த பதஞ்சலியார் வாழ்வு. சுரு

காயத்து இரியும்—ஆகாயத்திற் பறக்கும். காயதிரியும். பதம்சலியார்—பாதம் சலியாதவர்.

ஒன்றுமற்றோ ரான்முலையு முண்மைநெறி கண்டோருங்
கன்றுமறந் தீர்க்குங் கலைசையே—கொன்றைமுடிக்
கங்கா தரனார் கடையேன் கவிபுவக்கும்
அங்கா தரனா ரகம். சுசு

ஒன்று கன்று மறந்து ஈர்க்கும்—ஒரு பசுவின்கன்று மறந்து ஈர்க்கும். கன்ற மறந்தீர்க்கும்—பயின்ற பாவத்தைத் தீர்க்கும். அம் காது—அழகிய காது.

வாளரவ வல்குனல்லார் வாள்விழியு மாலயமுங்
காளமியம் புஞ்சீர்க் கலைசையே—நீள்வீணைக்
கஞ்சக் கரத்தான் கடும்பிறவி வேரறுக்கும்
அஞ்சக் கரத்தா னகம். சுஎ

காளம் இயம்பும்—நஞ்சக்குச் சமஞ்சொல்லும். காளம்—சிறுசின்னம். அஞ்சு அக்கரத்தான்—ஸ்ரீபஞ்சாக்ஷரம் என்னும் மந்திரமுடையவர்.

உத்தமர்தேர் நூனெறியு மொள்ளொளிசேர் நித்திலமுங்
கத்தங் கொழிக்குங் கலைசையே—சத்தருவி
உற்றவரை யாள்வா ருறுதனங்க டோய்வரகா
அற்றவரை யாள்வாரகம். சுஅ

கத்து—பிதற்றுதல், அங்கு ஒழிக்கும். கத்து அம்—ஒலிக்கின்ற நீர். வரையாள்—மலைமகளாகிய உமாதேவி. வார்—கச்சு. ஆள்வார்—ஆள்பவர்.

பல்வகைநூ லாய்ந்தவரும் பார்த்திவர்சூட் டும்முடியுங்
கல்விரவி யேயுங் கலைசையே—வல்வினையால்
இட்ட தளையுடையா ரெண்ணத்தினுக் கரியார்
பட்ட தளையுடையார் பற்று. சுகூ

கல்வி ரவி ஏயும்—கல்வியினாற் சூரியனை ஒக்கும். கல் விரவி—இரத்தினம் பொருந்தி. தளை—பாசம். பட்டு அதளை—பட்டாகத் தோலை.

நற்றரள நீர்ச்செறுவு நாவலர்க்கண் முத்தமிழுங்
கற் றையவை யேறுங் கலைசையே—குற்றமில்சீர்
ஆவினஞ் சாடினா ரன்பிறக்கன் வேள்விபுக்க
தேவினஞ் சாடினார் சேர்வு. எ0

கற்றைய வை—தொகுதியாகிய வைக்கோல். கற்று ஐ அவை—படிக்கப்பட்டு அழகிய சபையில். ஆவின் அஞ்சு—பஞ்சகவ்வியம். தேவினம்—தேவகூட்டம்.

செவ்வைமனத் தன்பினருந் தென்மடுவிற் செங்கயலுங்
கவ்வையலைத் துள்ளுங் கலைசையே—கொவ்வைவாய்த்
துப்பிதழி வாமத்தார் சுற்றுசடி லத்தினிறை
பப் பிதழி வாமத்தார் பற்று. எக

கவ்வை அலைத்து உள்ளும்—துன்பத்தைக் கெடுத்து நினைக்கும். கவ்வை அலை—ஒலியையுடைய திரை. துப்பு இதழி—சிவப்பாகிய அதரமுடையவள். இதழி—கொன்றை. வாமம்—அழகு.

சீற்றமுறு வாட்கையருஞ் செங்குமுதத் தேனளியுங்
காத்திரவில் வாங்குங் கலைசையே—நாத்திகமில்
நீகிக் கருத்தினார் செஞ்சுகந்தார் கற்கரிக்கன்
றேகிக் கருத்தினா ரூர். எஉ

காத்திரம்—பெருமை. காத்து இரவில் வாங்கும்—காத்துநின்று இராக்காலத்திலே எடுக்கும். கல் கரிக்கு—கல்லானைக்கு. இக்கு அருத்தினார்—கரும்பை உண்பித்தார்.

தேம்பா விசையினருஞ் செய்க்கீலமாளிகையுங்
காம்போதி யோதுங் கலைசையே—கூம்பா
மருப்பச் சிலையான் மகிழ்ந்திடினுமேற்கும்
பொருப்பச் சிலையான் புரம். எங

காம்போதி—ஓர்ராகம். காம்பு ஓதி ஓதும்—மூங்கிலையுடைய மலைக்குச்

சமஞ்சொல்லப்படும். மரு பச்சு இலை யான் மகிழ்ந்து இடினும்—மணம் பொருந்தி பசிய இலையை நான் மகிழ்ந்து இட்டாலும். சிலை—வில்லு.

வஞ்சியிளம் பேதையரும் மாரு திராப்பகலுங்
கஞ்சனையைப் பார்க்குங் கலைசையே—நெஞ்சம்
உருக வழுத்துவா ரும்பரின்பத் தேனைப்
பருக வழுத்துவார் பற்று. ௭௪

கஞ்சனை—கண்ணாடி. வழுத்துவார்—துதிப்பார். அழுத்துவார்.

வண்டோடை யம்புயமு மாவீர மேபுயமுங்
கண்டூதி யாருங் கலைசையே—பண்டோர்கோ
லங்கூ விளத்தா னழற்பிழம்பாய் நீண்டெழுந்த
பைங்கூ விளத்தான் பதி. ௭௫

கண்டு ஊதி—பார்த்து ஊதி. கண்டூதி—தினவு. கோலம் கூ விள—விட்டுணுவாகிய பன்றியானது பூமியைக் கிழிக்க. கூவிளத்தான்—வில்வமுடையவர்.

தண்டாச் சவுரியர்க டாக்குமடி யாருமுறு
கண்டீர வங்கூர் கலைசையே—திண்டேர்
அருக்கரைக்கண் டொட்டா ரறிவிலா நெஞ்சத்
தருக்கரைக்கண் டொட்டார் தலம். ௭௬

சவுரியர்—வீரர். கண்டீரவம்—சிங்கம். உறுகண் தீர—துன்பம் நீங்க. அங்கு ஊர். அருக்கரை—சூரியருடைய. கண் தொட்டார்—கண்ணைத் தோண்டினவர். தருக்கரைக் கண்டு ஒட்டார்.

புட்குலமு மாதரைவேள் போல்வாரு மாலையினிற்
கட்சிவந்து கூடுங் கலைசையே—வெட்சிமலர்
அந்தார்க் குமரனு ரையரர வென்றிமையோர்
வந்தார்க் குமரனூர் வாழ்வு. ௭௭

கட்சி—பறவைக்கூடு. கண் சிவந்து—கண்ணானது சிவக்கப்பெற்று. அம் தார்—அழகிய மாலை. குமரனூர்—முருகக்கடவுள். ஐயர்—பிதா. அர என்று—ஹரஹர என்று சொல்லி. ஆர்க்கும் அரனூர்.

வீட்டுநெறி தேராரும் வேதியர்வேள் வித்தழலுங்
காட்டத் தெரியுங் கலைசையே—கூட்டரணம்
நீறு வசித்தார்நன் னேசமிலே னெஞ்சினிற்றேன்
ஊறு வசித்தா ருறை. ௭௮

காட்ட—காண்பிக்க. காட்டத்து எரியும்—சமித்தினாலெரியும். கூட்டு அரணம்—முப்புரம். நீறு அசித்தார்—நீறாகும்படி சிரித்தார். வசித்தார்—தங்கினவர்.

கோமளமின் னார்முலைக்குங் கோலவத னத்திறுக்குங்
காமர் மதிவீழ் கலைசையே—நாமரையா
மத்தி னடிப்பார் மதியைக் கலைகெடக்கோ
பத்தி னடிப்பார் பதி. ௭௯

காமர் மதி—மன்மதனுடைய புத்தியும். காமர் மதி—அழகிய சந்திரன். அரை யாமத்தின் நடிப்பார். கோபத்தின் அடிப்பார்.

வார்முலையார் நன்னுதற்கும் வாவிவிடா யுற்றவர்க்குங்
கார்முகந்துண் ணென்னுங் கலைசையே—நார்மிகுத்த
உள்ளத் திருப்பினா ருள்ளோன்றன் சன்மனத்தை
மெள்ளத் திருப்பினார் வீடு. ௮௦

கார்முகம்—வில்லு. துண்ணெனல்—அஞ்சுதல். கார் முகந்து உண் என்னும்—நீரை மொண்டு உண் என்று சொல்லும். நார்—அன்பு. உள்ளத்து இருப்பினார்—மனத்திலே இருத்தலுடையவர். மெள்ள—மெல்ல.

நூலஞ்சு நுண்ணிடையார் நோக்கமுமம் போருகமுங்
காலஞ்ச மின்னுங் கலைசையே—கோலமுடி
வைத்தகம லத்தார் வருங்கூற்றை யஞ்ஞான்று
தைத்தகம லத்தார் தலம். ௮௧

கால் அஞ்ச—இயமனும் பயப்பட. கால் அஞ்சம்—காலையுடைய அன்னப் பறவை. கமலத்தார்—கங்கை நீருடையவர். அஞ்ஞான்று—அப்போது. உதைத்த. கமலத்தார்—பாதமுடையவர்.

மைம்மாறு சிந்தையரு மாறு விதரணருங்
கைம்மாறு கொள்ளாக் கலைசையே—வெம்மான்றோல்
வீக்கு மரையன் விழிபடவென் சஞ்சிதத்தைப்
போக்கு மரையன் புரம். ௮௨

மை—ஒழுக்கம். மாறுகொள்ளல்—மாறுபடுதல். கைம்மாறு—பிரத்தியுபகாரம். வீக்கும் அரையன்—கட்டுகின்ற அரையையுடையவர். அரையன்—அரசன்.

பட்டாரு மிட்டிடையார் பார்வையிலுங் கோதையிலுங்
கட்டா ரிவருங் கலைசையே—எட்டான
ஆசை யுடுக்கையா ரண்டங் கிடுகிடுக்கும்
ஓசை யுடுக்கையா ரூர். ௮௩

கட்டாரி—வாள். கள் தார்—தேன்பொருந்திய மாலை. ஆசை—திக்கு. உடுக்கை—சீலை. உடுக்கை—ஒருவாச்சியம்.

அத்தார் மகவினத்தை யாட்டின் குழவைநன்கு
கைத்தாய ரேந்துங் கலைசையே—கொத்தாருஞ்
சீத வடம்புடையார் தேவி சிவகாமி
மாத வடம்புடையார் வாழ்வு. ௮௪

கைத்தாயர்—வளர்த்ததாயர். நன்கு உகைத்து ஆயர் ஏந்தும்—நன்கு செலுத்தி இடையர் ஏந்துகின்ற. சீதம்—குளிர்ச்சி. வடம்—முத்துமாலை. மாது அவள் தம். புடை—பக்கம்.

மாதர் விழிவேலும் வண்ணப் பசுங்கிளியுங்
காதை யுரைக்குங் கலைசையே—ஓதிடும்பேய்
மண்டுபுறங் காட்டினார் வாணனறக் கண்ணனமர்
கண்டுபுறங் காட்டினார் காப்பு. ௮௫

காது ஐ உரைக்கும்—காதினைத் தேய்க்கும். காதை—கதை. புறங்காட்டினார்—சுடலையிலாடுவோர். புறங்காட்டினார்—பின்னிட்டார்.

அஞ்சநடை யார்மொழியி லையிளைஞர் மெய்யிலுருக்
கஞ்சுகஞ்சே ரின்பக் கலைசையே—அஞ்சக்
கிளத்தலை யோட்டினார் கேதமற நாயேன்
உளத்தலை யோட்டினா ரூர். அகூ

உருக்கம் சுகம் சேர்—அன்பினைக் கிளிப்பறவை அடையும். உரு—அழகு. கஞ்சுகம்—சட்டை. கிள அத்தலையோட்டினார்—கிள்ளப்பெற்ற அந்தத் தலையோட்டினையுடையவர். உளத்து அலை ஓட்டினார்—மனத்துள்ள அலைவை நீக்கினார்.

வாணுதலார் பூணுமவர் மையலுறப்பட்டோருங்
காணத் தணியுங் கலைசையே—ஏணிவளர்
கையா னடத்தினான் கங்காளன் சங்கரன்வெண்
மையா னடத்தினான் வாழ்வு. அஎ

காணத்து அணியும்—பொற் காசினாலணியும். காண—பார்க்க. தணியும்—அடங்கும். ஏணி—மான். நடத்தினான்—கூத்துடையவன். வெண்மை ஆன் நடத்தினான்—வெண்மையான இடபத்தை நடத்தினவர்.

மாணிலைமை வாய்மையரும் வாய்ந்தவிழா விண்ணவருங்
காணியவந் தோயாக் கலைசையே—ஆணவமாம்
பாம்புயங்க வாட்டினார் பைம்பொற் பொதுவரங்கின்
மேம்புயங்க வாட்டினார் வீடு. அஅ

காணிஅவம் தோயா—காணி என்னுமளவேனும் அவந் தோயப்பெறாத. காணிய வந்து ஓயா—காணும்படி வந்து ஓய்தலில்லாத. பாம்பு உயங்க வாட்டினார். புயங்க ஆட்டினார்—புயங்கம் என்னுங் கூத்தினர்.

வேரிமலர்ப் பண்ணையிலு மெய்ச்செல்வர் மந்திரமுங்
காரணக்கூ ழோங்குங் கலைசையே—வீரமெல்லாம்
மாளத் திகிரியான் மார்பொருவ னைப்பிளந்த
காளத் திகிரியான் காப்பு. அகூ

கார் அண கூழ்—மேகத்தை அண்ணும்படி பயிர். காரணம் கூழ்—நிலைபெறுதற் காரணமாகிய உணவு. திகிரியால்—சக்கராயுதத்தினால். காளத்திகிரி—காளாத்திமலை.

தூக்கணங்கன் னார்திருக்குந் தூக்குரைக்கு மாக்கணமுங்
காக்கணங்க ளாருங் கலைசையே—தாக்கணவும்
ஆதிவரா கத்தா னளப்பரிய சேவடியான்
மாதிவரா கத்தான் மனை. கூ0

காக்கணங்கள் ஆரும்—கருவிளைகளை ஒக்கும். கா கண் அம் கள் ஆரும்—சோலையினிடத்து அழகிய தேனை உண்ணும். ஆதி வராகத்தான்—விட்டுணு. மாது இவர் ஆகததான்—உமாதேவி பொருந்திய சரீரமுடையவர்.

ஆனகரு மேதிகளு மாயுமிசை யோரு மிக்குக்
கான முழக்குங் கலைசையே—மானமறப்

பற்றிப் பரசினார் பாசத் தளைகளையும்
வெற்றிப் பரசினார் வீடு. ௬௧

இக்கு கானம் உழக்கும்—கருப்பஞ்சோலையை உழக்குகின்ற. கானம் முழக்கும்—இசைப்பாட்டினை முழக்குகின்ற. பரசினார்—துதித்தோர். பரசினார்—மழுவாயுதமுடையவர்.

செம்மலர்ப்பூம் பொய்கைகளுந் தேம்பொழிலிற் கொண்மூவுங்
கம்மிக் குலவுங் கலைசையே—தம்மையறி
தொண்ட ருளக்கமலர் தோத்திரஞ்செய்வா ரன்பு
கண்ட ருளக்க மலர் காப்பு. ௬௨

கம் மிக்கு—நீர் மிகுந்து. கம்மி—மூடி. தொண்டர் உளம் கமலர்—தொண்டருடைய உளமாகிய தாமரைப்பூவிலிருப்போர். அருள் அக்கு அமலர்—அருளுகின்ற கணகளையுடைய நிருமலர்.

திங்கணுத லார்குழலிற் செங்தேன் கழனியிற்சேர்
கங்கங் கறுக்குங் கலைசையே—கொங்கிமயக்
கொம்பா ரிடத்தினார் குண்டுவயிற் றுக்குறுந்தாள்
வெம்பா ரிடத்தினார் வீடு. ௬௩

கங்கம் கறுக்கும்—சிப்புங் கறுக்கின்ற. கங்கு அங்கு அறுக்கும்—வரம்பை அங்கே உடைக்கும். இமயக்கொம்பு ஆர் இடத்தினார்—உமாதேவிபொருந்திய இடப்பாகமுடையவர். பாரிடத்தினார்—பூதப்படையுடையவர்.

எட்டுறு போகத்தாரு மீர்ங்குமுத முஞ்செய்ய
கட்டிலணை யிற்சேர் கலைசையே—உட்டியா
னத்துவ சத்தினார் நாயேனை யாண்டவிட
பத்துவ சத்தினார் பற்று. ௬௪

கட்டில் அணையில்—கட்டிலிலுள்ள சயனத்தில். செய் அகட்டில் அணையில்—வயலின் நடுவிலுள்ள வரம்பில். உள் தியானத்து வசத்தினார். இடபம் துவசத்தினார்—இடபக்கொடியுடையவர்.

மைப்பறழ்க்குக் கோவலரு மங்கையர்சொற் குக்குமிலுங்
கப்பங் கொடுக்குங் கலைசையே—துப்புறுங்கூர்
மத்தோ டணிவார் வளையிழைத்துச் சேர்த்ததவ
ளத்தோ டணிவா ரகம். ௬௫

கப்பு அங்கு ஒடுக்கும்—சிறு கிளைகளை அங்கே ஒடுக்கிக் கொடுக்கும். கப்பம்—திறை. கூர்மத்து ஓடு—ஆமையின் ஓடு. தவளம் தோடு—வெள்ளைக் குண்டலம்.

சுந்தரஞ்சே ராடவருஞ் சூதமுலை யார்குழலுங்
கந்தனையே யொக்குங் கலைசையே—பந்தஞ்
சிதையத் துதியார் திறங்கண் டவர்தம்
இதையத் துதியா ரிடம்.

கந்தனை—முருகக்கடவுளை. கம் தனை—மேகத்தை. சிதையத்துதியார்—சிதையும்படி துதிசெய்யாதவர். இதயத்து உதியார்.

எண்ணேற்ற வுத்தமரு மெண்டிசையுங் காரிகையார்
கண்ணோட்டஞ் செய்யுங் கலைசையே—பண்ணார்
சுருதிமா வாக்கினார் சுற்றுநரி யெல்லாங்
கருதிமா வாக்கினார் காப்பு. கஎ

கண்ணோட்டம்—தாட்சிண்ணியம். கண் ஓட்டம்—கண்ஓடுதலைச்செய்கின்ற. சுருதி மா வாக்கினார்—வேதமாகிய பெரியவாக்கினையுடையவர். மா ஆக்கினார்—குதிரையாகச்செய்தவர்.

பம்பு பெரும் பாக்கியரும் பஞ்சவனக் கிள்ளையும்பூக்
கம்பலத்தி லேறுங் கலைசையே—உம்பரெல்லாம்
வந்தித்த வக்கரையார் மாதுசிவ காமிபங்கர்
பந்தித்த வக்கரையார் பற்று. கஅ

பூ கம்பலத்தில்—பூத்தொழிலமைந்த கம்பளத்தில். பூக்கம் பலத்தில்.—பழுக்காய்க் குலையில். அக்கர்—அக்குமணிபுனைபவர். ஐயார்—அழகுடையவர். பந்தி தவம் கரையார்—வரிசையாகிய தவத்தினெல்லையினிற்பவர்.

தண்டிகையே றுஞ்செல்வர் தம்மார்பு நன்மடமுங்
கண்டிகையா ரங்கூர் கலைசையே—வண்டிளருந்
தண்டுளசித் தாமத்தன் றாமா சுப்புணர்ந்த
பண்டுளசித் தாமத்தன் பற்று. கக

கண்டிகை ஆரம்—கண்டிகைமாலை. கண் திகை ஆரம்—கண்ணைத் திகைக்கும்படி செய்கின்ற முத்து. தண்துளசி தாமத்தன—குளிர்ந்த துளசிமாலையையுடைய விட்டுணு. பண்டு உள சித்து ஆம் அத்தன்.

ஐவாய வேட்கை யகன்றவரு மாசதருங்
கைவாரஞ் செய்யுங் கலைசையே—மெய்வாழ்வு
நண்ணியபி ராமிதிரு நாமோடாறும் போற்றிடுஞ்சேற்
கண்ணியபி ராமிபங்கர் காப்பு. ௨00

கைவாரம் செய்யும்—ஒழுக்கத்தோடும் அன்புசெய்கின்ற. கைவாரம்—கரகோஷம். பிராமி—சரசுவதி. திரு—இலக்குமி. அபிராமி—உமாதேவி.

வாழியதொட் டிக்கலையூர் வாழி சிவகங்கை
வாழி சிவகாம வல்லியெந்தாய்—வாழி
புகழ்ச்சிதம்ப ரேசரருள் போற்றுமவ ரன்பர்
மகிழ்ச்சியுடன் வாழி வளர்ந்து. ௨0க

முற்றிற்று.

இந்தக் கலைசைச் சிலேடை வெண்பா நிகண்டும் இலக்கணமுங் கற்றபின் இலக்கியங் கற்கத் தொடங்குஞ் சிறுவர்க்கெல்லாஞ் சொற்களையுஞ் சொற்புணர்ச்சிகளையும் அப்பியாசஞ்செய்தற்குத் தக்க ஒருநூல். இதன்கண் நூறு செய்யுள்கள் உள்ளன. ஒவ்வொரு செய்யுள்களிலும் இரண்டாமடிகளெல்லாம் இரண்டுமூன்று பொருள்கள்கொள்ளும்படி சிலேடையாகவும் பின்னிரண்டடிகளும் யமக திரிபுகளாகவும் பாடப்பட்டிருக்கின்றன. இப்போது ஒவ்வொரு சொற்களையும் பிரித்துப் பதவுரையாக எழுதாமல் ஒவ்வொரு கவிகளிலும் அரிதுணர்தற்பாலனவாய்க்கிடக்குஞ் சொற்களையுஞ் சொற்றொடர்களையுந் தெரித்தெடுத்துக்கொண்டு வேறு சொற்களோடு புணர்ந்து செருகுண்டு சிறிதும் புலப்படாது பிரித்தமாத்திரத்திற் பொருள் புலப்படுஞ் சொற்களைப் பொருள்கூறாது பிரித்துவிட்டும், புலப்படாத பொருளுடைய சொற்களுக்குப் பொருள்கூறியும் முற்றும் பொருள் புலப்படுதற்குரிய ஒருரையுடையதாக்கிப் பிரகடனஞ்செய்யப்பட்டிருக்கின்றது.

அ. கு.